ரதிராமன்

# பூவுக்குள் புயல்



நாகு பதிப்பகம்

# பூவுக்குள் புயல்

கவிஞர் ரதிராமன்

வெளியீடு :

நாகு பதிப்பகம்
10/33 கவிதாலயா,
நங்கநல்லூர்,
சென்னை-600 061.

பூவுக்குள் புயல்
கவிஞர் ரதிராமன்
(வேலுச்சாமி இராமகிருஷ்ணன்) (1946)

முதற்பதிப்பு : மே, 1987
விலை ரூ. 11-60

## ஆசிரியரைப் பற்றி...

| | | |
|---|---|---|
| இயற்பெயர் | : | வே. இராமகிருஷ்ணன் |
| புனைபெயர் | : | ரதிராமன் |
| பிறந்த தேதி | : | 20-6-1946 |
| கல்வித்தகுதி | : | எம். ஏ., பி. எல். |
| முகவரி | : | 10/33 கவிதாலயா, நங்கநல்லூர், சென்னை-61. |
| பிறந்த ஊர் முகவரி | : | முத்துராமலிங்கபுரம், மண்டலமாணிக்கம் அஞ்சலகம், காமராசர் மாவட்டம் 623605. |

பெற்றோர்

அன்னை—திருமாலம்மாள்

தந்தை—வெள்ளைக்காரரிடம் மானியம் வாங்கிப் பள்ளிக்கூடம் நடத்த மறுத்து ஆசிரியப் பொறுப்பை உதறித் தள்ளி, வார்த்தையால் வடிக்க முடியா சித்திர வதைகள், சிறைக் கொடுமைகளை ஏற்று ஒரு பட்டிக் காட்டிலிருந்துகொண்டு பரங்கியரை எதிர்த்து முழக்க மிட்ட விடுதலைப் போராட்டவீரர் வேலுச்சாமி.

---

தமிழோசை அச்சகம்,
84, அபிபுல்லா சாலை,
தியாகராய நகர்,
சென்னை-17.

விற்பனை உரிமை :
செல்வன் பதிப்பகம்
41, முத்து முதலி தெரு,
சென்னை-14.



# ரதிராமன் வாழ்க!

நதியாகச் சொல்லும் பாவ
நடையோடும் உவமைநேய
மதியாகக் கவிதையாக்க
மனமதிப்பாயிரம் தந்த
சதிராடும் அழகைக்கண்டவன்
தமிழ்மங்கை நலனைக்கண்டவன்
ரதிராமன் கவிதை மேலும்
நலமாகி மகிழ்கவாக.

சென்னை
12.9.74

கண்ணதாசன்

கவிச்சக்கரவர்த்தி!
கவிதை யொன்றைக் கேட்டு உன்னிடம்
யாசிக் கவந்தேன்; நீயோ
கம்பனை யல்லவா
வாசிக் கவைத்தாய்—
"எடுத்தது கண்டார்
இற்றது கேட்டார்" என்று!
அடடா, உனது
வித்தக விரல்கள்
வெள்ளைக் காகிதம் தொட்டதும்
வினாடிப் பொழுதில்
கவிதை பூத்த விந்தைக்
காட்சி! அதற்குச்
சாட்சி, கண்மணி சுப்பு அல்லவோ?

கவிஞர்.
ரதிராமன் எம்.ஏ.,பி.எல்.

10/33, கவிதாலயா,
நங்கநல்லூர்,
சென்னை-600 061.
மே, 1987.

தீக்குச்சிகளின் தலைகளே தெருவில் மோதிக்கொண்டால் மருந்துகளல்லவா நாசமாகும்?... சிங்களத்திற்குப் பாலம் கட்ட சிரத்தை கொண்ட சிற்றணியைப் போல 'மரபு-புது'க் கவிதைப் பாதைக-ளுக்கிடையே மண் சுமந்து போட்டிருக்கிற முயற்சிதான் இந்தப் "பூவுக்குள் புயல்!"

## என்னுரை..

'மரபு-புது'க் கவிதைக் கேடயங்களைத் தூக்கிக் கொண்டு தனி மனிதர் சிலர் தங்களுக்காகப் போரிடுகின்றனர்- கவிதைக்காக அல்ல.

'கட்டுக்குள் அடங்காமல் காற்று வெளியிலே பறக்கிற சுதந்திரப் பறவைகள் நாங்கள்' என்று சொல்லிக் கொள்ளப் புதுக்கவிதையாளருக்கு முழு உரிமையுண்டு.

'கட்டுக்குள் செல்கிற கட்டழகுக் காவிரியால் களஞ்சியங்கள் கொஞ்சும்; காட்டாற்றுப் பாதையிலே அழிவுதானே மிஞ்சும்?' என்று வினவ மரபுக் கவிஞருக்கும் உரிமையுண்டு.

இரண்டிலுமே விற்பன்னர்கள் ஏதோ ஒன்றின் விற்பனை-யாளராக மாற வேண்டுமோ என்பதே கேள்வி.

ஆயினும், மரபுகளைப் பிணங்கள் என்றா பழிப்பது? புதுக்கவிதைகளைப் புழுதிகள் என்றா முகம் சுழிப்பது? அதனைப் 'பிலாக்கணம்' என்று பாய்கிறார் ஒருவர்; இதனைக் 'தலைக்கனம்' என்று தாவுகிறார் மற்றவர்.

தீக்குச்சிகளின் தலைகளே இப்படித் தெருவிலே மோதிக் கொண்டால் மருந்துகளல்லவா நாசமாகும்?

கருத்துக்கள் மோதலாம்; கருச்சிதைவு கூடாது

எத்தனையோ இதயங்களின் குமுறல் வாசனையின் ஒரு துளியை மட்டுமே நீங்கள் இங்கே வாசிக்கிறீர்கள்.

சிங்களத்திற்குப் பாலம் கட்ட சிரத்தை கொண்ட சிற்றணில் போல, 'மரபு - புதுக் கவிதைப் பாதைகளுக்கிடையே மண் சுமந்து போட்டிருக்கிற முயற்சிதான் இந்தப் "பூவுக்குள் புயல்!"

கவியரசு வைரமுத்து அவர்களின் கூர்மையான பார்வை 'அந்த' எனது நோக்கத்தை நுட்பமாகத் தெரிந்து கொண்டு, "மரபுக் கவிதைகளின் இசை ஒழுங்கினைப் புதுக் கவிதைக் குள் புகுத்த நினைக்கும் (ரதிராமன்) உத்தி" என்று எழுதி விட்டது.

இந்தப் புதிய வரவினை (கானல் வரி, கந்துக வரி, அம்மானை வரி போன்று) "புதுவரி" என்று டாக்டர் அவ்வை அவர்கள் அறிமுகம் செய்கிறார்.

கலைமாமணி கவிஞர் முத்துலிங்கம் அவர்களின் விமர்சன வெளிச்சத்தில் எனது சாதாரணக் கவிதைகள் கூட சிந்தனை வளமிக்க ஒளிப்பூக்க - ளாக உயர்வு பெற்று விடுகின்றன.

அறிஞர்கள் டாக்டர் அவ்'வை', 'வை'ரமுத்து', 'முத்து'லிங்கம் ஆகிய அந்தாதி அரங்கங்களின் முத்திரைச் சுவடுகள் பதிந்த இந்தச் சுவடிகள் உங்களின் பார்வை மேடைகளில் படியேறி வருகின்றன!

அன்புடன்,
ரதிராமன்.

"புலமைத் தமிழில் புதுவரி வரைந்திடப்
புகுந்த இரதிராமன் புதுவர வாகிறார்
புதுக்கவிதை போலப் புனைந்தி ருக்கிறார்
புத்தகம் முழுவதும் புதுமைக் கவிவரிச்
சித்திர மாகவே செதுக்கி யுள்ளார்...
வாழ்த்துக் கூறி வரவேற் கின்றேன்!"

வரவேற்கிறார்
டாக்டர்
ஔவை நடராசன்

சென்னை,
12-2-1987.

பூவுக்குள் புயலென்னும் நூலுக்குள்
கருத்துகள் செறிந்த கவிதையைப் பார்த்ததும்
உள்ளத்தில் எனக்கு உவகை பூத்தது!

கவிஞர் இரதிராமன்
இனிக்கும் சொற்களில் இலக்கியம் வழங்க
ஈடுபட் டிருக்கும் இளைய புலவர்!

மரபை மதிக்கும் மனப்பான்மை யோடு
புதுக்கவிதை போலப் புனைந்தி ருக்கிறார்.
புலமைத் தமிழில் புதுவரி வரைந்திடப்
புகுந்த இரதிராமன் புதுவர வாகிறார்!

தாய்மொழிக்கும் பிறமொழிக்கும் உள்ள
வேற்றுமையை
'நாட்டு மொழிதான் நம்விழிக் கோபுரம்

வேற்று மொழிநம் வீட்டுச் சாளரம்'
என்று இரதிராமன் எழுதப் பார்த்ததும்
பாவேந்தர் தான்என் பார்வையில் நின்றார்!

தாய்மொழி மீது தாளாத அன்பை
வாரிக் கொட்டி வழங்குமிந் நூலில்
பிறமொழிச் சொற்கள் பெருகி வருவதை
தவிர்ப்பதுதான் தமிழுக்குப் பெருமை!

"கையகல நெஞ்சினுள்ளே
கருங்கடலின் ஆர்ப்பரிப்பாய்
என்னிதயப் பூவினுள்ளே
உன்னினைவுப் பெரும்புயலே!"
இப்படி இரதிராமன் இதயப் பூவில்
புயலாக வீசிப் புலம்ப வைப்பது
கலைந்து போன காதல் நினைவு!

இதனால்தான், புத்தகத் திற்கும்
"பூவுக்குள் புயலென்று" புனைபெயர் தந்து
காதல் நினைவையே காட்டி முடிக்கிறார்;

'இரதி' என்பதைக்கூட இந்த 'இராமன்'
அவளை நினைந்துதான் அணிந்துளார் போலும்!

படம்போல் காதலைப் பாடுமிக் கவிஞர்
உடம்பின் சுருக்க மடிப்பைக் கண்டு
'முதிர்ந்த அறிவின் முத்திரைக் கலைகள்'
'தேக்க நினைவின் தூக்கக் கலக்கம்' என்று
சொல்லிப் பார்ப்பது சுவையாக உள்ளது!

ஆல மரத்தின் அழகிய விழுதுகள்
இவருக்குப்
பச்சைக் குடையின் பக்கக் கம்பியாம்!

அடடே! இப்படி இவர்தான்
புத்தகம் முழுவதும் புதுமைக் கவிவரிச்
சித்திர மாகவே செதுக்கி யுள்ளார்!

இந்தச்
சிறப்புக் குரிய சிந்தனை யாளர்
கவிஞர் யாரையோ கடுமை யாக
எழுதிய சொற்கள் எரிமலைக் கற்கள்!
நல்ல இலக்கியம் நல்கிட முன்வரும்
எவரானாலும் இப்படி ஒருவர்மேல்
வருத்தப் புழுதியை வாரி யிறைப்பது
பொருத்தமேயில்லை!

என்றாலும், இந்நூல்
இனிக்கும் வகையில் எழுதப் பட்ட
மணக்கும் கவிதை மலர்வன மாகும்!
வாழ்த்துக் கூறி வரவேற் கின்றேன்!

ஔவை நடராசன்

"மரபுக்கவிதைகளின் ஓசை ஒழுங்கினைப்
புதுக்கவிதைக்குள் புகுத்த நினைக்கும்(ரதிராமனின்)
உத்தியால் பல கவிதைகள்
அகவற்பாக்களாய் ஆகியிருக்கின்றன...
ரதிராமனின் எழுத்துக்கள்
வாழ்க்கையின் பரிசாய் இருக்க
வாழ்த்துகிறேன்!"

## வாழ்த்துகிறார்

கவியரசு வைரமுத்து

புதுக்கவிதை என்பது மொழியின் அங்கமாக இல்லாமல் வாழ்க்கையின் அங்கமாக ஆகி விட்டது.

வாழ்க்கையோடு தனக்கிருக்கும் முரண்பாடு களைச் சொல்லுவதற்கு ஒவ்வொரு மனிதனுக் கும் ஒருவடிகால் அல்லது வாகனம் தேவைப்படு கிறது.

கவிஞர் ரதிராமனுக்குக் கவிதை என்ற வாகனம் நன்றாகவே வசப்பட்டிருக்கிறது.

நொறுங்கிப் போன வாழ்க்கையை, கருகிப் போன கனவுகளை அழுகிப் போன நடைமுறைகளை ரதிராமன், பக்குவமான வார்த்தைகளால் பதிவு செய்கிறார்.

இதிலுள்ள பல கவிதைகள் உணர்ச்சியாலும், உக்கிரத்தாலும் உன்னதம் பெறுகின்றன.

நூலெங்கும் எள்ளிநகையாடுவதும், கிள்ளி விளையாடுவதும் பரவலாய்ப் படிந்திருக் கின்றன.

மரபுக்கவிதைகளின் ஓசை ஒழுங்கினைப் புதுக் கவிதைக்குள் புகுத்த நினைக்கும் இவரது

உத்தியால் பல கவிதைகள் அகவற்பாக்களாய் ஆகியிருக்கின்றன.

பட்டுப்புடவையில் சரிகை மாதிரி புதுக்கவிதைத் தொகுதிகளை அவலக் கவிதைகள் அலங்கரிக்கின்றன.

"ஏ பிரியமானவளே!" என்ற தலைப்பில் இவர் எழுதியிருக்கும் ஒரு சொற்சித்திரம் இந்தத் தொகுப்பிற்கே மகுடம் சூட்டுகிறது என்று கருதுகிறேன்.

பொருளாதார தர்மங்களுக்கும், சமூக தர்மங்களுக்குமிடையே இரண்டு ஜீவன்கள் காதல் ரணங்களுக்குக் கட்டுப்போட்டுக் கொண்டு நடப்பதைக் கவிஞர் காட்சியாக அங்கே வடித்திருக்கிறார்.

கற்ற கல்வியை—காலம் வந்து புடம் போட்டுக் கொடுக்கிற போதுதான் ஒளிமயமான கவிதைகள் உருவாகக் கூடும்.

இங்கே மொழியறிவு பெற்றவன் சிந்தனையாளனாக இல்லை; சிந்தனையாளனாக இருப்பவனுக்கு மொழியறிவு இல்லை.

இரண்டும் சரிவிகிதத்தில் சங்கமிக்கிற கவிஞர்களாலும், கலைஞர்களாலும்தான் எதிர்காலம் ஒளிபெறும் என்ற நம்பிக்கை கொண்டவன் நான்.

அந்த நம்பிக்கையை 'ரதிராமன்' போன்ற கவிஞர்கள் எதிர்காலத்தில் காப்பாற்றுவார்கள் என்று கருதுகிறேன்.

ரதிராமனின் எழுத்துக்கள் வாழ்க்கையின் பரிசாக இருக்க வாழ்த்துகிறேன்.

சென்னை,
*9—4—1987*

அன்புள்ள...
**வைரமுத்து**

''யாரும் இதற்குமுன் சிந்திக்காத
முறையில் சிந்தித்துக் கூறியிருப்பது
இவரது கற்பனைக்கு எடுத்துக்காட்டு.
இதை ரசிக்காதவன் கவிநயத்தை
உணராதவன்...''

# விமர்சிக்கிறார்

**கலைமாமணி**
**கவிஞர் முத்துலிங்கம்**

எத்தகைய உள்ளடக்கத்தைப்'புதுக்கவிதை' என்று இன்றைக்குச் சொல்கிறார்களோ அத்தகைய உள்ளடக்கத்தில் ''பூவுக்குள் புயல்'' என்ற கவிதை நூலைப் படைத்திருக்கிறார், கவிஞர் ரதிராமன். சிந்தனைத் தீப்பிழம்புகள்!

''மலையும் மாடியும்
தரைமேல் உயரம் என்றால்
மடுவும் பள்ளமும்
தலைகீழ் உயரம்'' (பக்கம்—10)

என்று யாரும் இதற்குமுன் சிந்திக்காத முறையில் சிந்தித்துக் கூறியிருப்பது இவரது கற்பனைக்கு எடுத்துக்காட்டு.

இதை ரசிக்காதவன் கவிநயத்தை உணராதவன்!

மலையை நாம் பார்க்கிறோம்; மடுவையும் பார்க்கிறோம். இதைப் பார்க்கும்போது ஏற்றத் தாழ்வொன்று

தான் நமக்குத் தோன்றுகிறது. இந்தக் கவிஞருக்கும் அதுதான் தோன்றுகிறதென்றாலும்,

"மடுக்களைத் தின்றுதான்
மலைகள் வளர்ந்தன" (பக்கம்—9)

என்று புதிய வகையில் இவர் சொல்லும்போது அதை ரசிக்காமல் இருக்க முடியவில்லை.

சிகரெட்டைப் பற்றி எந்தக் கவிஞரும் இதுவரை பாடவில்லையென்று நினைக்கின்றேன். 'சிகரெட் உடல்நலத்திற்குக் கேடு' என்று சிகரெட் பெட்டிகளில் அச்சிடுவதற்குப் பதில் இவர் எழுதிய கவிதைகளையே அச்சிட்டு விடலாம்.

"முனையிலே உனக்கு
நெருப்பு வைப்பதால்
முடிவிலே எமக்கும்
கொள்ளி வைக்கிறாய்!"

(பக்கம்—36-கவிதையின்
முன்னுரை வரிகள்)

என்ற வரிகள் கிண்டலை உள்ளடக்கி நம்மை இன்புற வைக்கும் வரிகள்; அங்கதச் சுவையுடையது!

அரைக்கம்பத்தில், சிலர் மறைவுக்காகக் கொடி யிறக்கம் செய்கிறோம். மறைந்தவர்களுக்கு மட்டுந் தானா அந்த மரியாதை? வாழ முடியாதவர்களுக்கு அனுதாபம் தெரிவிக்க யாரும் அரைக்கம்பத்தில் கொடியைப் பறக்கவிடுவதில்லை; அவர்கள் தங்களுக்குத் தாங்களே அரைக்கம்பத்தில் கொடியேற்றிக் கொள்கிறார்களாம்—எப்படி?

"தேகம், அஃதொரு
தேக்குக் கம்பம்—
அதனின் அரைக்கம பத்தில்
அரைஞாண் கயிறு.
அதிலே ஏற்றிக் கொண்டனர்
அவர்க ளாகவே
கோவணக் கொடியை
கோபத் தோடு! (பக்கம்—40)

ரதிராமன் புதுக்கவிதைக்காரரிலிருந்து வித்தியாசப் படுகிறார்.

"மங்கா மணத்தொடு
மாறா நிறத்தொடு
மரணம் வென்ற
மல்லிகைப் பூக்களே மரபுகள்" (பக்கம்—47)

என்று கூறுகிற இக்கவிஞர்,

"பாதை என்பது மரபு
பயணம் அதிலொரு
புழக்கம் மட்டுமே...
கட்டை வண்டிகள்
காலா வதியாய்ப் போகலாம்;
எந்திர வாகனம்
அந்த இடத்தில் பறக்கலாம்;
புழக்கம் இப்படிப்
புதுமை பெறலாம்; ஆயினும்
பாதை மீறிய
பழக்கமாய் மட்டும்
என்றுமே இராது" (பக்கம்—48)

என்று 'மரபு என்பது மாட்டுவண்டி' என்ற ஒரு சிலரின் கருத்துக்குப் பதிலடி கொடுத்திருப்பது பாராட்டத் தக்கது.

நமது இந்திய மக்கள் எப்படிப்பட்டவர்கள் என்பதை,

" 'காந்தி' என்பது இன்று
ஒப்புக் காக
உச்சரிக் கும்பெயர்;
வெள்ளைப் பருந்து
பத்திர மாகத் தந்தஅக்
கோழியைக் கொன்றது
குஞ்சு தானே?" (பக்கம் 44)

என்று படம் பிடித்துக் காட்டுகிறார்.

பூப்போன்ற கவிதைகளுக்குள் புயலைப் போலே கருத்துக் கனலைக் கொட்டியிருக்கிறார். புதுக்கவிதை விண்மீன்களுக்கிடையே சுடர்விடும் வெள்ளிநிலா!

சிந்தனைச் சோலையைத் தேடும் இதய வண்டுகளுக்கு இது ஒரு பிருந்தாவனம்!

முத்துலிங்கம்.

## படையல்

அன்புச் சுரங்கங்களாம்

என் அன்னையார்
திருமாலம்மாள் அவர்கள்

என் தந்தையார்
விடுதலைப் போராட்ட வீரர்
வேலுச்சாமி அவர்கள்

பாதகமலங்களுக்கு என்
பாமலர்கள்

## நன்றிக்குரிய நல்லிதயங்கள்...

உரைவேந்தர் டாக்டர் ஔவை நடராசன்
கலைமாமணி கவிஞர் முத்துலிங்கம்
கவியரசு வைரமுத்து

ஓவியக்கவிஞர்
அமுதோன்

எழுத்தாளர்
ப. மு. இளங்குமரன்

கவிஞர் கானவன்
கவிஞர் வெங்கனூர் புகழேந்தி

வழக்கறிஞர்
ஆண்டாள் கிள்ளிவளவன் பி.ஏ.,பி.எல்.
(அச்சக உரிமை)

அறிமுகம் செய்கிறேன்

## உங்களுக்கு...

புல்லாங்குழலின் ஒழுங்கான துவாரங்களில் புகுந்து தழுவும் போதுதான் சுதந்திரத் தென்றல் சொர்க்க இசையாகிட முடியும்.

புதுக்கவிதையாளரின் சுதந்திரச் சிந்தனை விதைகள் மரபுப் பாத்திகளில் பயிராகி மணந்தாக வேண்டும்.

கருத்துக்கள் மட்டுமே கவிதையாகிட முடியாது என்பது உண்மைதான்; என்றாலும்கூட இன்றையப் புதிய கருத்துக்களைக் கருத்தரிக்காவிட்டால் மரபுகளும் மலடாகிவிடும் அபாயமுண்டு.

எளிதில் கடித்துச் சுவைக்கக்கூடிய—கணுக்களே இல்லா இனிப்புக் கரும்புகளாம் இணைக்குறள் ஆசியப்பாகூட கடினமானதுதான் என்று சிலர் சொல் வதை, சோம்பல் மனங்களின் சுகமான சிந்தனை என்று ஒதுக்கவும் தேவையில்லை.

அந்தப்''பா''வையும் இளக்கி ''இளகிய இணைக் குறள் ஆசிரியப்பா'' வடிவினைப் புதிதாக இங்கே வார்த் திருக்கிறேன்.

இந்தப் புதிய வார்ப்பு பிடித்திருக்கிறதா உங்களுக்கு......?

—ஆசிரியர்

# உள்ளே.......

சீதைகூடத்
தாண்டினாள் அல்லவா?
சமுதாயமே, நீ
தாண்டினால் என்ன?
அந்த
அக்கினிக் கோட்டினை விடவும்
அதிகமாய்ச் சுடுபவையா
இந்த,

## வறுமைக் கோடுகள்?

கொஞ்சு தமிழில் 'கோடு' என்றால்
மஞ்சு தவழ்கிற மாமலை...

மடுக்களைத் தின்றுதான்
மலைகள் வளர்ந்தன;
இங்கு பலரின்
அடுக்களை காய்வதால் அன்றோ
அடுக்கு மாடிகள்
உயரமாய் வளர்ந்தன?

கோபுர உச்சியின் காட்சி
குழிகளைத் தோண்டிச்
சுரண்டிய தற்கு
நிதர்சனச் சாட்சி.

மலையும் மாடியும்
தரைமேல் உயர மென்றால்
மடுவும் பள்ளமும்
தலைகீழ் உயரம்.

அதனால் தான் ஏ,
தலைகீழ் உயரமே
உனக்கும் கூட
'கோடு' — 'வறுமைக் கோடு'
என்ற வார்த்தை உதித்து விட்டதோ?

## கோலம்...(1)

வைகறைக் கன்னியை
வரவேற் பதற்கு
வாசலில் எழுதிய கவிதை

மைவிழி எடுக்க
மணிவிரல் தொடுக்க
மாவினால் வரைந்தாள் வனிதை!

வசந்தம் என்னை இன்னும்
வழியனுப்பி
வைக்கவில்லை...
வயோதிகமே,
நீ ஏன் அதற்குள்
வட்டிக் கடையின்
ஈட்டிக் காரனைப் போல
வாசலின் முன்னால்
வந்து நிற்கிறாய்?
இது, ஓர்
அவசரப் படுத்தும்
அஞ்சல் காரனின்

## நினைவூட்டுக் கடிதம் !

காதின் ஓரம் கறுத்த ரோமக்
கற்றை நடுவே
வெளியே எட்டிப் பார்க்கிற
வெள்ளிக் கம்பிகள்...

கால தேவன்
கறுப்புத் தாளில்
கைப்பட எழுதிய
வெள்ளை வரிகள்...

இராமனின் தலையில்
மணிமுடி ஏற்றி வைக்க
அயோத்தியில் ஒருநாள்
தசரத மன்னனைக் கூட
ஞாபகப் படுத்திய
இராஜ ரகசியச் சொற்கள்...

இராம காவிய
ஆரம் பத்திற் காக
அடியெடுத் தமைத்த
ஆதி வார்த்தை...

வெளுத்து உதிர்கிற
முடியுதிர் காலம்
அந்திப் பொழுதில் தானே
வந்திடும்? ஆயினும்,
அந்தப் பொழுதின்
வருகை பற்றி
வசந்த காலத் திலேயே
எச்சரிப் பதற்கு
என்னிடம் கூட
வந்து விட்டனர்!

இந்த வெள்ளைத் தூதர்
என்னைக் கண்டதும்
அஞ்சி ஓடிட, நானொரு
பிசிராந் தையார்ப் பெருந்தகை அல்லவே?

வாசிக்கத் தெரிந்த
வயது வந்தவர்களுக்காக
வழங்கப்பட்டதே
வள்ளுவனின்
காமத்துப்பால் !
ஆனால்
யோசிக்கத் தெரிகிற
பக்குவம் அரும்பும் முன்பேயே
நேசிக்க வருவது
இந்தக்

## காமத்துப்பால்!

மஞ்சள் கோட்டை மீறிக் குறுக்கே
மந்தைப் பசு, அதோ
எதிரே சுவரைப் பார்த்ததும்
அத்தனை அவசரம் !
பட்டிக் காட்டில்
'பச்சை'ப் புல்லைப்
பழக்கமாய்த் தின்னுமாம் ; ஆகவே,
'பச்சை' 'பச்சை' யாகப்
பருவச் சதைகளைப்

பட்டணச் சுவர்களின்
பளிச்சிடும் விளம்பர ஒட்டியில்
பார்த்ததும் பரவசம் ;
பறக்குதாம் இப்படி...
பாய்ந்து மேயுதாம் !

எனவே, இந்தப்
பசுக்களின் மடிகளில்
கறக்கிற பாலும்
காமத் துப்பால் !

அதனை எடுத்துப்
புட்டியில் அடைத்துப்
புகட்டி விடுவதால்
இந்தக் காலப்
பொடியன் செய்கிற
சுட்டித் 'தனங்க'ளைச் சொல்லவும் வேண்டுமோ ?

இவையோ
விலாவை எரிக்கிற
நெருப்புகள்...
இவை எப்படி
விறகுகளுக்காக
வெட்டித் தனமாய்க்
காத்திருக்கும்?
ஆம், இவை —

## பற்றி எரிகின்ற
## வெற்று வயிறுகள்!

அடுப்புகள் இங்கே எரியவே இல்லை;
ஆனால், சிலரின்
ஒட்டிக் கிடக்கிற
வெற்று வயிறுகள் மட்டும்
விறகில் லாமலே
பற்றியெ ரிகின்றன...

கருகிப் போவது
குடல்மட் டுந்தான் அன்று ;
உருகி ஆவியாய்ப்
போகிற ஆவியும் கூட...!

அந்த அக்கினி
அடிக்கடி விடுகிற
ஆத்திர மூச்சின்
அடங்கா வெப்பம் குமுறி
எரிமலை யொன்றை
நாளைப் பொழுதில்
பிரசவிக் குமென்பது
நிச்சயம், நிச்சயம், நிச்சயம் தலைவனே !

## கோலம்...(2)

தையலே இல்லாத்
'தரை''இலை' தெளித்து
தையலாள் வைத்த விருந்து !

தையிலே விளைந்த(அந்)
நொய்யிலே எறும்பு
மெய்யெலாம் புரளுதாம் விழுந்து !

பக்கமெல்லாம்
உறவுகள் தான்
பசுமையாக
நீயிருந்தால் !
ஆயினும்,
பக்கபலம்
ஆகிடுமா
உனக்கு
இந்த

## விழுதுகள் ?

பச்சைக் குடையின் பக்க வாட்டுக்
கம்பிகள் ; — மேலே
பவனி வருகிற
பாடும் குருவிப்
பாதம் தாங்கிகள் ;

தேரில் வருகிற
தென்றல் தேவனுக் காகத்
தொங்க விட்ட
தோரண அழைப்புகள் ;

நிழல்தரும் மாளிகை யொன்றை
நித்தமும் சுமக்கிற
நித்தியத் தூண்களாய்
நடிக்கக் கற்றவை ;

கோபுரம் தாங்கும்
பொம்மைப் பொய்கள் ;

சொர்க்க வீட்டின் நடுவே
சொகுசு ஊஞ்சல் ;

முற்றிய கிளைகள்
மண்ணில் ஊன்றிய
பற்றுக் கோடுகள் ;

செங்குத் தான
நங்கூ ரங்கள் ;

பற்றில் லாத
பரட்டைக் கிழவனின்
ஊன்று கோல்கள் ;

பூமியுள் புதைந்த
புனித வேர்களைத்
தொங்கு கின்ற
துதிக்கை விழுதுகள் தொட்டுத் துதிக்குதோ ?

ஈர்க்குச்சியை விட
இளைத்த தேகம்
சிலருக்கு...
ஈழை கட்டிய அவரின்
மார்புக்குள்ளே
மறைந்து கிடக்கிற
இதய மென்பதோ
ஆயுதப் பட்டறை! ஆம்,
'எவரை எப்படிக் கவிழ்க்கலாம்'
என்று
என்றுமே
ஆராய்ச்சி இரைச்சலில்
ஆழ்ந்து கிடக்கிற
ஆயுதப் பட்டறை!
இந்த மனிதரை விடவும்
மட்டமானவையா,

## கொசுக்கள்?

கூவத் திற்குக் கூடக் கோபமாம்
சீலம் நதியின்
சிறப்பைக் கேட்டு விட்டு!
சீலம் செய்தது பாக்கியம்...
கொசுவே! உன்னைச்
செல்லமாய் ஈன்று
செழிக்க வளர்த்த
சீலம் நதிக்கு, நீ
சிறப்புத் தந்தாய்!

பார்வை பதிந்த
பூமியை எல்லாம்
ஆளுகைப் போர்வைக் குள்ளே
சுருட்டிக் கொண்ட
சூரன், அலெக்சாண் டரரசன்...

அவனே கூட அந்த
ஆற்றுப் படுகை மேட்டில்
அஞ்சிப் படுத்தான் ;
அலறித் துடித்தான் ; நீயொரு
முத்த மிட்டாய் ; அவனோ
மூச்சை விட்டான் !

சிங்கம், யானை,
சிறுத்தை, புலிகளைக் கூட
'வலை'க்குள் மாட்டி
வளைத்துப் பிடித்து விடுகிறோம் ;

உன்னைக் கண்டால்
ஒளிந்து கொள்ள
நாங்கள் அல்லவா
'வலை'க்குள் புகுந்து வசிக்கிறோம் இரவிலே ?

மதங்கள்,
இனங்கள் என்கிற
பேதங்கள் எல்லாம்
கலப்பு மணத்தால் மட்டுமே
களையப் படுபவையா?
அல்ல—
கலப்படங்களும் கூடத்தான்
அந்தச் சேவையை
அழகாய்ச் செய்கின்றன.
இதோ ஓர்
இனிய தொண்டு—

## கறுப்பு நிலவு !

மண்மகள் பதித்த முத்தமா, இந்த
முசுலீம் தோழரின்
நித்தத் தொழுகை
நெற்றியில் வட்டமாய்க்
கறுப்புச் சுவடு முத்திரை ?

இந்துத் தோழரின்
நெற்றியில் கூட
கறுப்பு நிலவைத்
தீட்டிக் காட்டி, மத-இனக்
கலப்புச் செய்குதோ கலப்படக் குங்குமம் ?

உயிரே !
உனக்குத் தெரியும்
புயலைக் கூடத் தாங்கும்
புயங்கள் எனது இதயப்
பூவிற்குண்டு என்று...
ஆனால்,
புயலே இந்தப்
பூவிற்குள்ளே
புகுந்து கொண்டதால்
புல்லின் சுவாசத்தைக் கூடப்
பொறுக்க முடியவில்லை.
உனக்கு மட்டுமே
புரியும் இந்தப்

## பூவுக்குள்ளே புயல்!

நெஞ்சமெல்லாம் நிறைந்தவளே !
நினைவினிலே மணப்பவளே !
வஞ்சமொன்றை யறியாத
வாலிபத்தின் வயதினிலே
வசந்தத்தின் வாசலினை
வளைக்கரத்தால் திறந்தவளே !
மையிடாத விழியினிலே
மையலினை வெளிக்காட்டி
மொய்க்குழலில் எனைவைத்து
முடிபோட்டுக் கொண்டவளே !

கடைக்கண்ணின் ஓரத்திலே
கவியரும்பும் நேரத்திலே
அடைக்கலமாய் இமைக்குள்ளே
அடைகாத்த பெண்மயிலே !

கன்னங்கறுத் தவளேதமிழ்க்
கன்னலைப்போல் இனிப்பவளே !
சின்னக்கறுங் குயிலேஎன்
செண்பகப்பூ வாசனையே !

என்னதான்நான் எழுதினாலும்
ஊற்றெடுக்கும் யோசனையே...
இமயத்தின் சிகரங்களை
எட்டியுதைத் துவிட்டுநாமும்
இணைந்திருந்தோம் போகத்திலே
இன்பத்தின் உச்சியிலே...
மகிழ்ந்திருந்தஅப் போதையிலே
மங்கைஉன் பெயர்கேட்டேன்...

அகங்குளிர்ந்து நீசொன்னாய்
அம்மாவைத் தஉன்பேரை...
"அதுவல்ல, உன்பெயரோ
'ரதி'," என்றேன் அப்போதே !
மதுவாம்இந் நினைவொன்றே
மகிழ்ந்திருக்கப் போதுமடி !

உன்னிலேநான் சங்கமித்தேன்
ஒருயுகமா, பலயுகமா?
தின்னத்தின் னஅந்நினைவு
திகட்டிடாத தேனமுது !
உன்னைநான் வானவில்லாய்
ஒப்பிட்டேன்; இன்றோநான்
உண்ணும்போ து(உ)ணவினிலே
உப்பிட்டேன் கண்ணீரால்;
விண்ணிலிப்போ வருவாயா
வேறிடத்தில் புகுந்தாயா?
மானே,மரிக் கொழுந்தே, தேன்
மல்லிகைப்பூ பூஞ்சிரிப்பே !
நானேதான் வேண்டுமென்று
நாணத்துடன் சொன்னவளே!
பொன்மணலில் நம்காற்றுப்
போடுதடி எக்காளம்;
கண்ணில்கலங் தவளேஉனைக்
காணுவது எக்காலம்?
மண்ணிலினி எஞ்சியுள்ள
மாயநாளை ஒவ்வொன்றாய்
எண்ணிக்கண் மூடுகின்றேன்;
எடுத்தென்னைப் போடுகின்றேன் !
கையகல நெஞ்சினுள்ளே
கறுங்கடலின் ஆர்ப்பரிப்பாய்
என்னிதயப் பூவினுள்ளே
உன்னினைவு பெரும்புயலே !

என்னைப்
பார்த்துக் கொண்டே இருப்பாய்...
பசி, என்னைவிட்டுப்
பறந்துவிடும் !
இப்படித்தான்—
தாய்மீன்
தனது அன்புப் பார்வையால்
குஞ்சு மீனைக்
கொஞ்சி வளர்க்குமாம்...
ஒரே திசையில்
ஒன்றாய் நீந்துகிறோம்
ஒரே நதியில் !
உனது
பார்வைபடாமல் நடுவிலே
பிரிக்கிற இச்
சீனச்சுவரைச்
செய்து வைத்தது யார்,

## ஏ, பிரியமானவளே...!

உனக்குத் தெரிந்த உன்னத மந்திரம்
எனது பெயர்தான் என்பது
எனக்குத் தெரியும்...

உனது இதயச் சுவர்களில்
இந்தப் பெயர்தான்
எதிரொலி செய்கிற தென்பதும்
எனக்குத் தெரியும்...

கவ்வத் துடிக்கிற உனது
கண்களைப் பற்றியும்
பேசத் தவிக்கிற
பேதை உதடுகள் பற்றியும்
பிரியமா னவளே
எனக்குத் தானே
புரிய முடியும்?

எழுதி அழித்து, மீண்டும்
ஆசை வரிகளை
எழுதிப் பார்த்து ரசிக்கிற
உனது மனத்தைப்
பற்றிக் கூட
எனக்கு மட்டுமே தெரியும்...

கூடு எதிலோ
கூடி விட்ட குயிலே!
உனது நெஞ்சின்
ஊமைக் கொந்தளிப் பெல்லாம்
என்னால் மட்டுமே தானே
உணர முடியும்?

கற்பை எனக்குக்
கொடுத்து மகிழ்ந்தாய் உனது
காணிக் கையாய்...
கருப்பைப் பொருளை எந்தக்
கற்பக் கிரகத் திற்கு
அர்ப்பணம் செய்தாய்?

'மன்னன்' பதவிக் காக
மனுப்போட் டுவைத்தேன்;
'கண்ணன்' நியமனத் திற்கே
கரிசனம் காட்டினாய்;
எப்படி என்னால்
ஏற்க முடியும்?

இருவரும் அருகிலே
இணையாய் நடக்கிறோம்;
இருப்பினும் இந்த
இணைய முடியா
ஆயுள் தண்டனை
இந்த உலகில்

நம்மைத் தவிர
தண்ட வாளத் திற்கு
மட்டுந் தானே?

விரிக்கிறோம்; முடியுதா
விரல்களைச் சேர்த்திட?
பார்க்கிறோம்; ஆனால்,
பேச முடியுதா?
இமைகளும் நமது
இதயச் சுவர்களும்
தீண்டு கின்றன; இருப்பினும்
இடைவெளி நமக்குள் எதற்கடி
நீண்டுபோ கின்றன?

மூச்சுக் கூட
மோதி உரசு மாறு
ஒட்டியே நடக்கிறோம்;
ஆயினும் நாமோ
எட்டியே கிடக்கிறோம்
இதுஏன், இதுஏன், இதுஏன் உயிரே?"



சமுதாயத்தின்
கொள்ளிக் கண்கள் சுட்டு
கருகிவிட்ட நமது
காதல் மொட்டினை நீ
கனவுப் பூமியில் பதியம் போட்டு
கானல் நீரூற்றி
உயிர்ப்பிக்க முயற்சி செய்கிறாய்—
கண்ணை விழித்தபின்
கனவுதான் என்பதைப்
புரிந்து கொண்டதும்
நான் படுகிற
நரக வேதனையை
நீ, நினைத்துப் பார்த்தால்
என்னை
நிம்மதியாகத் தூங்க விடுவாய்...
வேண்டாம் அந்தக்

## கனலாய்ச் சுடுகிற கனவுப் பூக்கள்!

இரவில் மட்டுமே என்னிடம் வருகிற
இதய ராணியே, —இப்படி
இரவல் உறவு
எதற்கடி நமக்குள்?

விழிகளின் சாளரம்
மூடிய பிறகு
கனவின் கதவைத் திறக்கிற
கள்ளி,நீ... திரும்பிடு...!

“சொர்க்க மென்பது எப்படி
நம்மை விடவும்
சுகமாய் இருக்க முடியும்?”—
அப்படி இருவரும்
சொக்கிக் கிடந்த
சுந்தர நாட்கள்
சொர்க்கம் புகுந்தன...!

கந்தர் வமாலைப் பொழுதில்
காந்தம் பூசிய
மந்திர வசியப் பேச்சில்
மயங்கிக் கிடப்பேன்...
எனது அந்தக்
கருவ மெல்லாம்
கரைந்து சோர்ந்து
கண்ணை மூடிப் படுக்கிறேன்....
என்னைச் சற்றுக்
கண்ணய ரவிடு...!

கண்ணே, வேண்டாம்
கனவில் களவு!

கைவிரல் பட்டதும்
கொழுந்துவிட் டெரிகிற
கொள்ளைச் சூட்டில்
உனது திராட்சைத் தேகம்
கோடி ரோமப் பூக்களைக்
குப்பெனச் சிலிர்க்கும்!

அது,இசைக் கருவி;
கலைமகள் வீணை; வெறுப்புக்
கனலில் விறகாய்க்
கரிந்து போனபின்
கனவுக் கரங்களில்
கரிசன வாத்தியம்
கானம் இசைக்குமா?

காலில் லாமல் தவழ்கிற
கனவு மேகம்
கைகளில் எப்படி அகப்படும்?

துயிலின் மடியில் உலகம்
தோய்கிற நேரம்...
அந்த அந்தகப் பொழுதின்
அமைதி ஆட்சியில்
எனது இந்திர சபையில்
ஏக மகிழ்ச்சிதான்...!

ஆகா, அந்தக் கனவில்
ஆயிரம் பூக்களின்
ஆல வட்டம்;
ஆயினும் நானுன்
மகரந் தப்பொடி
மயக்கில் மட்டுமே கிடப்பவன்.

கண்களைத் திறந்தால்
ஐயகோ! நானும்
கந்தக மருந்தால்
பொடிப்பொடி யாகிற
கல்லாய்ச் சிதறிப் போகிறேன்.

முறுக்கே றியநாண்
முதுகில் வெட்டப் பட்டால்
மூர்ச்சை யாகுமே—
அதுபோல சாய்ந்து விடுகிறேன்...

இரவில் மட்டுமே
என்னிடம் வருகிற
இரவல் உறவு
எனக்கினி வேண்டாம் இதய ராணியே!



## தேகச் சுருக்கக் கோடுகள்...(1)

கால தேவனின்
கலப்பை வரிகள்...

கவலைக் குறிகளின்
கிறுக்கல் மொழிகள்...

முதிர்ந்த அறிவின்
முத்திரைக் கலைகள்...

முதிரா ஆசை
மோதும் அலைகள்...



இதயப் பைக்குள்
இந்தியத் தாயை
ஏந்திச் சுமந்தவன்
இந்தப் பாரதி...
அந்த
அகத்தின் அழகு
அவனது முகத்திலும்
மின்னியது...
ஆம்;
கூர்ந்து பார்த்தால்
பாரதி முகமேதான்
பாரத தேசப்படம்...
அவனது,

## அகத்தின் அழகு
## முகத்தில்...

தும்பைப் பூவினைத் தூய்மை செய்கிற
உம்தலைப் பாகைக்கு ஈடு
வெம்பனி இமயக் கோடு !

பாரதி, உனது
கூர்முனைத் தாடி
கன்னியா குமரிக் கோடி !

கவிஞனே, உந்தன்
நெற்றிக் குங்குமப் புள்ளி
வெற்றித் திருநகர் தில்லி!

சிங்கப் புலவனே,
சிந்தனைத் திலகமே!
காவிரி வெற்றிலைக்
காவியைப் போலநின்
செவ்வாய் இதழ்கள்
சிரிக்கக் காண்கிற பூமி
செந்தமிழ் நாடு—
அப்படித் தானே சாமி?

உனது மூச்சிலும் பேச்சிலும்
தேசிய வாசமே;
பாரதி, உன்முகம் பாரத தேசமே!



முனையிலே உனக்கு
நெருப்பு வைப்பதால்
முடிவிலே எமக்கும்
கொள்ளி வைக்கிறாய்!
நீ,
புகைந்து போகிற திசையில்
அதாவது,
வானம் நோக்கி அல்லவோ
எம்மையும்
வழியனுப்பி வைக்கிறாய்,
ஏ,

## சிகரெட்?

வளைந்து நெளிந்து வானம் நோக்கி
வரைகிறாய் பாதை....

ஆனால், பாவம்
காற்று வெளியிலே
கால்தடம் பதித்திட உனக்குக்
கொஞ்சமும் வக்கிலை...

ஆகவே, நீ,எம்
நெஞ்சக் கூட்டினுள்
வஞ்சமாய் நுழைந்து
எங்களின் மெல்லிய
காற்றுப் பைகளின்
கனமிலாச் சுவர்களைக்
காயப் படுத்தி விடுகிறாய்!

கந்தல் புள்ளியாய்க்
கல்லறைச் சுவடுகள் அங்கே
செதுக்கி விடுகிறாய் சிவப்புத் தீயனே!

அக்கினிச் சுடர்
ஆகாயம் நோக்கியே தாவுவது...
தண்ணீரோ
தரையைப் பார்த்தே தவழுவது...
இந்த—
எதிர்த்திசை இயக்கப்
பௌதிக உண்மை எனக்குப்
புரியவில்லை;
அதைப்போல், எனக்குள்
அக்கினிக் குஞ்சாய்
அவதரித்து விட்ட
ஆசை நெருப்பு—அதனை—
தரையைப் பார்க்கிற, உன்
தாமரை விழிகளின்
அருவிப் பார்வை அல்லவா
''அணைத்து''ச் சுகிக்கிறது!
அது (எதிர்த்திசை) இயக்கம்; நாம் இணக்கம்!
ஓ, அந்த,

## உச்சி...!

அவளது நெற்றி அரைகுறைப் பிறைநிலா!
அகல்விளக் கென்பதும்
அரைகுறை வட்டப்
பிறைநிலாப் போன்றதே!
தீபச் சுடரின்
திசையா மாறும்?

எனவே, இந்த
அகல்விளக் கினிலே
எண்ணெய்த் திரிச்சுடர்
விண்ணைப் பார்த்தே எரியுது!

மண்ணைப் பார்க்கும் (இப்)
பெண்ணின் வகிடும் கூட
உயரே தான்பார்க் கின்றது!

அதனால் தானோ
"உச்சி" எனும்பெயர் இதற்கும் வாய்த்ததோ?

## தேகச் சுருக்கக் கோடுகள்...(2)

கலைந்த கனவுகள்
குலைகிற சுவடுகள்...

தேக்க நினைவின்
தூக்கக் கலக்கம்...

அரைக்கம்ப
மரியாதையும்
சிரக்கம்ப
வணக்கமும்
செத்துப்போன
சிலருக்குத்தானா?
நித்தம் நித்தம்
செத்துச் செத்துச்
சீரழிகிற
சிலருக்கில்லையா
இந்த

## அரைக்கம்பக் கொடிகள்?

நிழலை உருக்கி நிறமாய்ப் பூசிய
நித்தக் காய்ச்சிகள்...
வேர்வை பிழிந்த
வெந்த உடலை
வறுமைச் சூட்டில் வறுத்து
உலர வைக்கிற
நித்தியக் காட்சிகள்...

வைரம் பாய்ந்த
வலிமைத் தேகம்....
வெய்யிலை "வாங்கும் சக்தி"யை
வளர்த்துக் கொண்டனர்,
மெய்யிலே...! அவரது
பையிலே...? பையே இல்லை!

தேகம்—அஃதொரு
தேக்குக் கம்பம்—அதனின்
அரைக்கம் பத்தில்
அரைஞாண் கயிறு...
அதிலே ஏற்றிக் கொண்டனர்
அவர்க ளாகவே
கோவணக் கொடியை, மிகவும்
கோபத் தோடு !

எவர்சா வுக்கோ
இறங்கும் கொடிக்கு
இரங்கு கின்ற
இதயமே இல்லை,
இறக்கிற இவர்மேல்!

ஏக்கம் நிறைந்த இவரது
துக்க காலம்
தேய்ந்து, அதற்குத்
தக்க படியாய்
'ஜனகண' பாடு கின்ற
தினம்வரு வதெப்போ ?

அதுவரை நாம்நம்
அன்புக் குரிய
கோவணக் கொடியை
அங்கீகரிக்கலாம் அல்லவா, தலைவரே ?

## தேகச் சுருக்கக் கோடுகள்...(3)

ஏறிய வயதின்
எழுத்து வடிவம்...

கூறிய மதியின்
கூர்த்த படிவம்...

உனது
உற்சாக வீதியின்
உற்சவ நாட்களில்
உன்னைச் சுமந்த வயிற்றை
உதாசீனம் செய்கிறாய்...
அது, ஒரு
நரைத்துப் போன
பிண்டத்தின்
நமத்துப் போன
பண்டம் தானே?
உன்னைப் போன்றோர்,

## வேர்களை மறக்கின்ற விருட்சங்கள்

அழுக்குக் சேற்றில் அழுகிய சாற்றை
அமுதமாய்ப் பிழிகிற
அற்புதத் தாய்கள்!

மண்ணில் புதைந்த வாறு
மரங்களை உயரமாய்
ஊட்டி வளர்க்கிற
உன்னத வேர்கள்!

சாக்கடை நீரிலி ருந்து
சந்தன மணத்தை,
கறுப்பு மண்ணிலி ருந்து
வனப்பு நிறங்களை
ரசாயனக் கலவை செய்கிற
ரசவா திகள், இவை!

பூக்களில், தளிர்களில் நிறத்தைப்
பூசி விட்டுப்
பூரிப் படைகிற
புனித அன்னை இனங்கள்!

இந்த வேர்களை
எத்தனை நினைவுகள்
தொட்டுப் பார்ப்பன?

விளம்பரத் திற்கு
விலையாய்ப் போகிற
விழிகளின் வாசலை
வேர்கள் எப்படி
எட்டிப் பார்க்க இயலும்?

கவர்ச்சிக் குத்தான்
காந்த ஈர்ப்பு!

வசீகரிக் கின்ற
வல்லமை பெற்றவை,
வண்ண மலர்களும்
வசந்தத் தளிர்களும் மட்டுமே....

வித்தை தெரிந்தவன்
'சர்க்கரை' என்று
எழுதித் தருவதை
சப்பிக் கொள்கிறோம்;
'சரி'யென ஒப்புக் கொள்கிறோம்!

விடுதலை நாள்விழாக்
காலட் சேபப் பேச்சில்
'காந்தி' என்பது
ஒப்புக் காகச் சொல்கிற
உச்சரிப் புப்பெயர்!

வெள்ளைப் பருந்து
பத்திர மாகத் தந்த,அக்
கோழியைக் கொன்றது
குஞ்சு தானே?

'ஜாலியன் வாலா பாக்'கின்
மரணக் குரலை
எதிரொலிக் கின்ற
செவிச்சுவர் எல்லாம்
செத்து இடிந்தன...

கரையான் புற்றுக் குள்ளே
கறுப்பு நாகம்...

ஓட்டு வேட்டைப் பொழுது
விடிந்தால் போதும்; உடனே—
பாட்டன் மார்கள்
பட்ட வடுக்களை எல்லாம்
சமாதி யிலிருந்து
தோண்ட வேண்டு மென்ற
தூய எண்ணம்
பேரனின் கழுகு மூக்கில்
வேர்வைத் துளிகளாய்ப் பூக்கும்!

சிறைக்குச் சென்றவர்
சிரங்கள் மொத்தமும்
நரைத்துப் போயின ; அத்துடன்
நடுக்கம் கொண்டன.

எனவே, இங்கே
சிரைத்துக் குவித்துச்
சேர்த்த பெரிய மனிதரின்
மண்டை களில்தான்
மலர்களால் கிரீடம்
மாட்டப் படுகின் றனவாம் !

தியாகம் என்ப தெல்லாம்
தெம்பே இன்றி
நொண்டு கின்ற
வயதா கிவிட்ட வார்த்தை தானே ?



"மரபு என்ற மாட்டு வண்டி—
பழமையானவர், பழகி விட்டவர்,
பயன்பட்டவர் என்பதற்காகப்
பாட்டனின் பிணத்துக்குப்
பட்டாபிஷேகம் செய்வதில்லை.
ஆனால், மரபுப் பிணங்களைப்
பல்லக்குகளில் சுமந்து திரிகிறோம்"

—அப்துல் ரகுமான், ஜூனியர் விகடன் 19-3-1986

(கவிதையின் கடைசியில்
மற்றொரு கவிஞரின்
மாற்றுக் கருத்து)

## மரபுகள் என்பவை
## மரணம் வென்றவை

மங்கா மணத்தொடு மாறா நிறத்தொடு
மரணம் வென்ற
மல்லிகைப் பூக்களே மரபுகள்!

வசதிக் கேற்ப
வளர்ச்சிக் கொப்ப
வாகனம் மாறலாம்; ஆனால்,
வகுத்த வழிகளோ
நிலைத்த வார்ப்பு!

பாதை என்பது மரபு;
பயணம் அதிலொரு
புழக்கம் மட்டுமே...

கட்டை வண்டிகள்
காலா வதியாய்ப் போகலாம்;

எந்திர வாகனம்
அந்த இடத்தில் பறக்கலாம்;

புழக்கம் இப்படிப்
புதுமை பெறலாம்; ஆயினும்,
பாதை மீறிய
பழக்கமாய் மட்டும்
என்றுமே இராது...

விதிகளை மீறினால், சாலை
விபத்தை யல்லவா
சந்திக் கவேண்டும்?

உடல்கள் என்பவை
ஓலைச் சுவடிகள் ;
காலக் கரையான் தீனிகள்...

ஆயினும், அந்தச்
சுவடிகள் பதித்த
சுவடுகள் மறைவது
சாத்திய மன்று!

வள்ளுவன் காந்திப் பாட்டனின்
தேக வடிவம்
சாதனம் மட்டுமே; அவற்றின்
சாதனை என்பதோ
சாகா வரத்தொடு வந்தவை...

வள்ளுவம் காந்தியம்
வயது மீறி
வாழ்பவை ; பிணங்கள் அல்லவே?

குழாய்கள் வந்து
குவியலாம் ; இருப்பினும், பழைய
வாய்க்கால் வரப்பு
வழக்கொழி வதென்பதே இல்லை !

அலாரம் அநேகம்
அலறிய போதிலும்
சேவலின் கீதம்
செவியில் விழுந்தால் மட்டுமே
பொழுது விடிந்ததன்
பொருளே புலப்படு கின்றது...

மரபுகள் என்பவை
மரணம் வென்ற மல்லிகைப் பூக்களே!

"இலக்கணத்தையே சிதைத்து விட்டு வரிகளை மடக்கி மடக்கி எழுதி அதைப் புதுக்கவிதை என்றால் கலைஞர் கருணாநிதி அந்தக் காலத்தில் திரைப்படங்களுக்கு எழுதிய வசனங்கள் எல்லாமே புதுக் கவிதைக்குரிய புகழ் மகுடத்தைச் சூட்டிக் கொள்ளும். வசன கவிதை... அல்லது உரைப்பாட்டுமடை என்று வைத்துக் கொள்ளலாம் என்று (25 ஆண்டுகளுக்கு முன் அப்துல் ரகுமான்) கூறினார்."

—கவிஞர். முத்துலிங்கம்,
சினிமா எக்ஸ்பிரஸ், 15-5-1986.

கருக்கல் பொழுதை
வியர்க்க வைக்கிற
கலப்பை மூக்குக்
குருவிகள் ; தினமும்

## விடியலைத் தேடும்
## பறவையின் கூட்டம்...

கீழ்வான் சிவப்பைக் கொண்டை சுமக்க
கூரை மேலே
"கொக்கரக் கோ"குழல் ஊதிக்
கூவிடும் சேவல்—

"திருச்சிற் றம்பலம்" ஓதிக்
கிறீச்சிடும் கரிச்சான்—

கரைந்து கரைந்து இருட்டைக்
கரைக்கிற காக்கைச் சாதி—

இவற்றை யெல்லாம்
சுவையாய்க் கேட்டு
சுகத்தைக் கூட்டி
சுருதியை மீட்டிடும் குயில்கள்...

ஆகா இந்த
சப்த சங்கீதங்களின்
சங்கமம் தானே
பூபாள ராகம்?

இப்படித் தினமும்
கருக்கல் கன்னியின்
கண்களைத் திறந்து
பொழுதை விடிய வைக்கிற
பறவைக் கூட்டமே!
விடியலை இதுவரை
தரிசித் திடாத
ஊமைக் குருவிகள் பற்றி
உமக்குத் தெரியுமா?

உங்களைக் கூட
ஒவ்வொரு நாளும்
உசுப்பி விடுபவை அவைதாம்;

உம்மை எழுப்பிடும் அந்தப்
பள்ளி எழுச்சிப்
பறவை பற்றி
உமக்குத் தெரியுமா ?

சிறகே இல்லாப்
பறவைக் கூட்டம்
கருக்கல் பொழுது
கருக்கொள் ளுமுன்பே கிளம்பி—
குடிசைக் கூட்டின்
சில்லிருட் டுநேரச்
சிமினிக் கண்கள்
சிமிட்டிக் கூப்பிடு கின்ற
அந்தி வரைக்கும்—

கலப்பை மூக்கால்
கிண்டிக் கிண்டித்
தேடுகின் றனவே,
வீணாய்ப் புழுதியில் விடியலை; கிடைக்குமா ?



இதயமிருந்ததால்
இரக்கப்பட்டு விட்டேன்; அவனோர்
இதயமற்றவன்
என்பதைப் புரிந்து கொண்டதும்
இறந்தே விட்டேன்—
தகுதியற்ற
திருவோட்டில்
வியர்வைக் காசுகளை
விரயம் செய்ததால் கூட
வேதனைப் படவில்லை...
திரும்பப் பெற முடியாத
காலத்தை
ஓசியாக அவனுக்குக்
கிரயம் செய்து கொடுத்துவிட்ட
அக்கிரமத்திற்காகவேதான்
துக்கப்படுகிறேன்...
இந்தப்

## பசுக்காம்பிற்குள்ளே பால் திரும்புமா?

அர்த்தமே இல்லா ஆத்திரப் பாட்டு;
இதுவோ அழுகுரல் வைத்த
அவல மெட்டு...

பத்தரை மாற்றுப்
'பொன்'னெனச் சொன்னதை
நம்பிப் போனேன்
அவசரப் பட்டு...

பித்தளை கூட
அல்ல வென்று புரிந்ததும்
புலம்பு கின்றேன்
ராகம் போட்டு...

நாடா வாக்கி
ஓடாய்த் தேய்த்தார் என்னைத்
தறியிலே இட்டு...

அணிந்து கொள்ள
நெய்து கொண்டார் தனக்கொரு
அழகிய பட்டு...

உடலிலே அதனை
உடுத்திக் கொண்டதும்
'போடா' என்றது அந்தப்
புனிதப் பகட்டு...

வேள்வி செய்ய
விறகே இல்லை என்றார்
வேதனைப் பட்டு...

வேள்விக் களித்தேன் உடனே
விலாவின் எலும்பை
விறகாய்ப் பிட்டு...

வேள்வியே அல்ல; அஃதவர்
வீட்டுச் சமையலே
என்பதைப் புரிந்ததும் திரும்பினேன்
ஏளனப் பட்டு...

தேனாய்ப் பேசிய அவர்,தன்
தேவை முடிந்ததும்
தேளாய்க் கொட்டினார்
தோளிலோர் கொட்டு...

இன்றோ உடைந்தது
அவரது குட்டு...

கானலை நோக்கிக்
கோணலாய் நடந்தஎன்
கால்களைப் பார்த்தே நோகிறேன்,
கானல் என்பதைக்
கண்டு கொண்டநாள் தொட்டு...

குருவி சேர்த்த
கோமே தகங்கள்
கொள்ளை போயின
குருபியின் கரங்களில்
கொடுக்கப் பட்டு...

ஒருவரின் ஏக போக
அனுபவிப் பிற்குக்
கிரயம் போய்விட் டன,என்
வியர்வைச் சொட்டு...

விரயம் செய்தேன்
விலைமதிப் பில்லா நாட்களை
விவரங் கெட்டு...

காலம் வீணாய்க்
கழிந்ததை நினைந்தே
கவல்கிறேன் இன்று
கண்ணீர் விட்டு...

உதிர்ந்து விட்ட
நட்சத் திரங்கள்...

புழுதியில் தொலைந்த
பொழுதுகள் மீண்டும்
பூக்கவே மாட்டா...

திரியிலே தீய்ந்த எண்ணெய்
திரும்புவ தேது ?

கறந்தபால் திரும்பி
நுழைவ தெப்படி
பசுவின் காம்புப் பாதை வழியிலே ?

---

## தேகச் சுருக்கக் கோடுகள்...(4)

அவிழும் நரம்புகள்
அதிர்வு நாளமா ?

சிந்தனைத் தறியின்
சிற்றிழை ஓட்டமா?

---

கசாப்புக் கடையின்
கணக்குப் பிள்ளைத் தனம்...
குழந்தை நெஞ்சங்களை ஏய்க்கிற
கிலுகிலுப்பைக் குணம்
ஊட்டிவிட்ட கரங்களை
வெட்டிச் சாய்க்கும் அன்பு
அன்னைத் தமிழை
அடகு வைக்கும் பண்பு...
உழைத்திட அஞ்சுகிற
உள்ளப் பாங்கு...
முன்றானை நிழலில்
மூச்சுவிடும் ஆண்மை
இப்படி ஒவ்வோர்
இனிய தன்மையையும்
அல்லது,
ஒருங்கே அனைத்தையும்
உடைய

## இப்படியும் சில...

இவரது பட்டியில் ஒருசில ஆடுகள்
இன்னும் உள்ளன,
கசாப்புக் கடைக்கு இவர்தான்
குத்தகை தாரர்
என்பதைப் புரிந்து
கொள்ளா மலேயே!

தேவனின் புனிதத்
திருச்சபைக் குள்ளே
தீபங் களாக்கப் போவதாய்ப்
பிரசங் கிப்பார் ;

ஆயினும், நம்பி வந்த
மெழுகுத் திரிகளின்
மென்னியைத் திருகி
ஏப்பம் விடுவார்
ஏய்ப்புக் கார
மேய்ப்பர் இரக்கத் தோடு!

சகாரா மணலில்
சாவதைப் பார்த்துச்
சகித்திடா ஒட்டகம்
சுமந்து சென்றது ஒருவரை...

தனது நாவை நனைக்க
தண்ணீருக்காய்
ஒட்டக உடலை
வெட்டிப் பிளந்தார்
அரேபிய நாட்டின் இந்த
அபூர்வப் பிறவி!

வயிற்றுப் பசியால்
வாடுகி றாரென
பாவம், தாய்ப்பசு நம்மவர்
பக்கமாய் வந்தது;

பக்குவ மாகப்
பாலைக் கறந்து
ஒன்றுமே இன்றி
உறிஞ்சிக் குடித்து விட்டு
கன்றைப் பசியிலே
கொன்று தீர்த்தார்!

வைக்கோல் கன்றைச் செய்து
வைத்துக் காட்டி
பசுவை ஏய்த்துப்
பாலைக் கறக்க வருகிறார்;
பாத்திரம் ஏந்திப்
பாடிக் கறக்க வருகிறார்!

பட்டி மந்தைப்
பகடைக் காய்களின் மத்தியில்
பலிக்கிற ஒருவரின்
சட்டாம் பிள்ளைச்
சங்கதி யெல்லாம்
சர்க்கார் ஊழியம்
செய்கிற போது செல்லுமா ?

ஆகவே, அங்கே
உழைக்கப் பயந்து
ஓடி வந்தார் ;

இருப்பினும், சம்பளத் தொழிலை
சமுதா யத்திற் காகத்
தியாகம் செய்ததாய்த்
தெருவில் முழங்குவார் !

மஞ்சள் குளிப்பதை
மறந்த வீடு ; எனவே
அதனைச் சரிசெய

மாத ஊதிய
மனைவி வியர்வை நீரில்
மஞ்சள் குளித்து
மகிழ்கிறார் ஒருநபர் !

இளைத்துப் போனவர் தமது
இளைத்த தமிழை
ஏலப் பொருளாய்க் கையில்
ஏந்திக் கொண்டு
ஏறி இறங்கி வருகிறார் !

வாத்தியம் பயின்ற
வாத்தியார் பார்வை
வரத்திற் காக
வணங்கிக் கிடக்கிறார் !

படஅதி பர்களின்
படிக்கட் டுகளை
எண்ணிப் பார்க்கிறார்
பாட்டு வாய்ப்புக்
கேட்டுக் கேட்டு !

'பாட்டுத் திறத்தால் உலகைப்
பாலித் திடு'எனப்
பாரதி சொன்ன
பாதை வழியே நடக்க
படாத பாடுகள்
படுகிறார் இப்படி!

ஏனெனில், இந்த மனிதர்
பாரதி வாரிசாம்...
அப்படி யென்றால்
இனிமேல் அந்தக்
கோட்சே கூட
காந்தியார் வாரிசே!

தன்னை விடவும்
தன்னிழல் நீளமாய்ச்
சுவரில் பார்த்தால் கூடச்
சூடா கிவிடுவார்!

உயரமாய் ஒருவர்
அருகிலே வந்தால் அல்லது
உருவா கிவிட்டால்

குழியைப் பறித்துக்
குப்புறப் பிடித்துத் தள்ளிக்
குள்ளமாய்க் காட்டிடும்
கெட்டிக் காரர்!

இரண்டுபேர் எதிரே
இணைந்து நடந்து வந்தால்
தனக்கு எதிராய்த்
திட்டம் போடுவ தாகத்
தீர்மா னிப்பார்!

நெருங்கி வந்ததும் கைகளை
நீளமாய் நீட்டி
நெருக்கமாய் அணைப்பார்...
நெஞ்சுக் குள்ளோ
நெருஞ்சி முட்கள்!

திரைப்படத் தாரகை வீட்டுத்
திண்ணை ஏறித்
தொண்டு செய்தால்

தில்லி மண்ணை
மிதிக்கலா மென்று இன்றொரு
மதிப்புப் போட்டு
மகிழ்ந்து கொள்கிறார் !

இடக்கைப் பையிலே
தேசியச் சாயம் ;
வலக்கைப் பக்கம்
பகுத்தறி வுவர்ணப் பொடிகள் ;
கைக்குட் டைக்குள்
மார்க்சிய வாசனைத் தூள்கள்...

மழைவரும் ஒருநாள்
சாயம் வெளுக்கும் ;
வேடந் தாங்கியின்
ஒப்பனை யெல்லாம் ஓடும் கரைந்தே !



இருப்பதைச்
சுருட்டிக் கொள்ள
இலக்கியப்
போர்வைக்குள்ளே—
பொதுநலச்
சட்டை போட்டு
சுயநல
வேட்டை யாட—

## அதோ அதோ பராக் பராக்

வாயிலே சிரிப்பு வார்த்தை இனிப்பு;
வருகிறார், அதோஅதோ!

ரெட்டி, நாயுடு என,மனம்
பட்டியல் போடும்;

"சாதியா?" என்று
சபையிலே இவர்வாய் கிழியும்;

ஆதா யமெனில்

தன்சா திசமயம் மொழியும்;
பெண்சா திபேசினால்
அசடு வழியும்...

அதுதான் அதோ அதோ பராக் பராக்!

'பரிசுக் காகநான்
பல்லை இளிப்பதா?' என்று
பவிசாய்ப் பேசுவார்;

அதனைப் பெற்றிட
அந்த ரங்கமாய்
முட்டிப் பார்ப்பார்,
மோதித் தீர்ப்பார்; ஏதும்
முடியா விட்டால்
தனது பாச்சாப்
பலிக்கா விட்டால் வேர்ப்பார்;

பரிசு பெற்ற
மனிதரைப் பிறரிடம்
பரிகசித் துவயிறு எரிவார்...

இந்த வயிற்றெரிச் சலார்,பராக்!

எல்லா ருமவரை
ஏய்ப்பதாய்ச் சொல்லி நடிப்பார்;

ஏய்க்கப் பட்டோர்
எழுந்து நிமிர்ந்தால்
குனிந்து கையைப் பிடிப்பார்;

இரக்கம் கசிய
உருக்கமாய்ப் பேசித் துடிப்பார் ;

முகத்தைக் தூக்கி
முதலைக் கண்ணீர் வடிப்பார்...

இப்படிப் பட்ட
அசகா யசூரர்
அதோஅதோ பராக்பராக்!

சீசர் தாமெனச்
சீலர் சொல்லிக் கொள்வார் ;

சிலரைப் புருட்டசின்
சொந்தமென் றுகூறி மகிழ்வார் ;

சீறுவார் அடிக்கடி
சரக்கிலாச் சாரைப் பாம்பர் ;

ஏமா ளியென்றால்
ஏறுவார் இந்தக் கொம்பர் ;

வஞ்சம் மறைத்து
வலிந்து சிரிக்கிற வம்பர் ;

நன்றி சொல்லவும்
நாக்குச் சுளுக்கும் நண்பர் ;

பரம பிதாமகன்
பரிசுத் தமானவர் பராக்பராக் இதோஇதோ!



வித்தகம் உள்ளவர் பலரிடம்
புத்தகம் போடும்
சக்தி இல்லை...
அறைக்குள் முடங்கி
அரங்கேறமுடியாததுகளின்
அழுது புலம்பல்கள்...
ஆயின்,
ஈசல் புற்றுகள்
இங்கு ஏராளம்....
வசதிகளும்
அவற்றுக்குத் தாராளம்...
வண்ணத்துப் பூச்சிகளோ
சகாராச் சூட்டில்
சமாதியாகிற கொடுமை ...
இதற்கொரு
முற்றுப் புள்ளிவைக்க,

## சரசுவதி-லட்சுமி சந்திப்பீர்களா?

'புத்தி' என்கிற பிறந்தகத் துள்ளே
புழுங்கிப் புகைந்து
புலம்பு கின்றாள்—இலக்கியப்
புத்திரி! அவளது
பதிப்பகச் சடங்குகள்,
அச்சுக் கூலி,
எனும்வர தட்சணைச் செலவுகள்;

வெளியிடும் வைபவக்
கலியா ணகாரியம்...

இத்தனை நெருக்கடி
இங்கே இருப்பதால்—

புத்தகம் என்கிற
புக்ககத் திற்குள்
புகமுடி யாமல்
செத்து மடிகிற
சிந்தனைத் தளிர்கள் அநேகம்!

வெள்ளை முகில்களாய்
விரித்த காகித வீதியில்
பறக்க முடியாப்
பட்டாம் பூச்சிகள்
இறக்கை களையே
எரித்துக் கொண்டு
இறக்கிற கொடிய காட்சிகள்...

நாணயக் காசுகள்
நசித்துப் போனதால்
'நா'நயச் சாவுகள்...

முளையிலே கருகி
மூர்ச்சை யாகிற
முளைப் பிரசவச் சவங்கள்...

இதற்கொரு முடிவே...?

ஆனால், எந்தக்
கரையா னுக்கும் கூடப்
பயன்பட முடியாக்
காளான் பெருகி
கரிசல் மண்ணைக்
கரையாக் குகின்றன...

பாலைத் திணைகள் பற்றிப்
பாவலர் படைப்பில்
பாடி எழுதலாம்; ஆயின்,
பாலைச் சூட்டில் அவரது
பஞ்சு இதயம்
பொசுங்கிப் போக லாமா?

இந்தக் காட்சியை—

வெள்ளை, சிவப்புப்
பங்கயப் பூக்களே, நீங்கள்
பிரிந்து நின்று
பார்த்து ரசிப்பது
என்ன நியாயம்?

மழை,நீ பெய்ய
மறுக்கிறாய் இவரது காட்டிலே...
கடலில் உனக்கேன்
கரிசனப் பார்வை?
கஞ்சிக் கலைபவர்
கைகளை உதறி விட்டு
வயிற்றி லடிப்பவர்
வாசலைத் தட்டுவாய்...

வாத்தியார் மகனிடம்
வாசிப் பில்லை;
வாசிக் கிறவன் வீட்டில்
வாத்தியம் இல்லை...

முட்களைத் தூர்த்து விட்டு
முல்லை பூத்திட
முத்து லட்சுமி,
முத்தமிழ் வித்தகி—இருவரும்
முழுமை யாக இணைகவே!

புத்தகப் பயிர்கள்
பொலிவொடு செழித்திட
பாத்தியில் உங்களின்
பார்வை பதிக்கவே!

கோடி 'வெள்ளி' குவித்துக்
கோட்டை சுவரியாய்க்
கொலுவீற் றிருப்பினும்
நிலவைப் பூக்கா விட்டால்
நீல வானம்
மலடு தானே?

சடையப் பகாவிரி—
கம்ப கங்கை
சங்கம மானதாய் நீங்களும்
சந்தித் திடுங்களேன்...

இரும்புப் பெட்டியும்
இதயமும் நெருங்கிக் கொண்டால்
குடியா முழுகிடும்?

தாமரைப் பூக்களே!
"தங்க" வானமும்
பொங்கும் "மதி"யும் போல
இங்கு வருகவே;
தங்கி நிறைகவே!

தாமரைப் பூக்களே!
'தாம்அரை' 'தாம்அரை' என்று
இன்னுமா நீங்கள்
தனித்தே இருப்பது?

அப்படி இருப்பின்
அர்த்த மற்றது;
எனவே நீங்கள் இனிமேல்
அர்த்த நாரிசம் ஆகுக உடனே!



உருவம்,
உவமை—இவற்றின்
உருவமாய்
ஒருசிலை.... அந்தத்
தேர், இன்று வருகிறது,
அசைந்து!
தன்னைத்
"தேர்" என்று தருகிறது,
இசைந்து!
எனது உயிரோ அந்தக்

## காதனி ஊஞ்சலில்...!

குப்புறக் கவிழ்ந்த கூன்பிறைக் கோடுகள்
குமரியின் புருவம்;

தப்புத் தவறிலா
தளிர்களின் வாசனைப் பருவம்;

செப்புத் தேரிலே
செதுக்கிய சிலையென உருவம்;

குட்டிக் கோபுரக்
குப்பிக் கலசமாய்க் கருவம்;

காந்தக் கண்ணிமை
கொட்டுது கொட்டு மேளம்;

சிட்டுக் கணுக்கால்
சதங்கைக் கிண்கிணித் தாளம்;

சிற்பக் கால்விரல்
சித்திரம் தீட்டுது கோலம்;

பட்டுப் பார்வை
போடுதாம் நடுவிலே பாலம்;

ஊசலா டுகின்ற
எனது உயிரின்
ஊர்வல வாகனம்
எதுதெரி கிறதா? இந்தக்
கரும்புக் குயிலின்
கட்டித் தங்கக் காதணி ஊஞ்சலே!



முடியினிலே
நானொருநாள்
முல்லையாய்
மணந்தாலும்
முடிவினிலே
அடிவேரில்
குடியிருக்க
வருவேன் நான் — நான்,

## உயிலாய்—உனக்கு உயிர்ப்பேனா ?

"நாளை"க் குள்ளே நுழைந்திடும் "இன்று;"
நுழைய முடியுமா—
"நேற்றுக்" குள்ளே "இன்று"ம்,
நெற்றுக் குள்ளே பிஞ்சும் ?

கழுத்தைப் பிடித்துக்
காலமோ தள்ளுகின்றது;
கண்கள் மட்டும்
கடந்து போன

வசந்த வரிகளை
வாசிப் பதற்குத்
திரும்பித் திரும்பிப் பார்த்துத்
தடுமா றுகின்றது ;

பிள்ளைத் தனமாய்ப்
பின்னங் கால்கள்
பின்னால் நடந்து செல்லப்
பின்னலி டுகின்றன;

நடந்து நடந்து போகிறேன்—
எனக்குப் பின்னால்
கறுப்பு நிழல்தான்
துரத்து கின்றது ;

நடந்து நடந்து நோகிறேன்—
எனக்குள் சவாரியாய்ப்
பழைய நினைவுகள்
பாரமாய் அழுத்து கின்றன ;

ஏக்கம் நூற்பது
எத்தனை கனவுச் சுமைகள் !

வழியனுப் பிவைத்த
வாசலில் மீண்டும்
வட்டம் போட்டுக்
கொட்ட மடிக்க அனுமதி
கொடுக்கப் படவே
இல்லை நமக்கு !

எட்டிச் சென்ற
மூச்சுக் காற்றை
மோப்பம் பிடித்துத்
திரும்பச் சுவாசிப் பதற்குத்
திராணி ஏது ?

முளைத்த அரும்பு
முதிர்ந்த விளைச்சல்
இருக்கிற மட்டுமே
இருக்க முடியும் ; உதிர்ந்தால்
செடியில் மீண்டும்
சேர்ந்து கொள்வது எப்படி ?

உதிர்கிற வற்றின்
உயர்ந்த அர்த்தமே
உரமாய்ப் போவதில் தானே?

தீயில் காய்ந்ததும்
தென்றலில் மேய்ந்ததும்
நோயில் படுத்து
நொந்து புலம்பி
அழுது சிரித்ததும்
எழுதி வைக்கிறேன்; அதுவோ
உபயோ கமுள்ள
உயிலாய் உனக்கு வாய்த்தால்
ஆயிரங் காலப்
பயிர்க்கு நானொரு
அடியுர மாக ஆகக் கூடுமே!



பத்திரம் போட்டுச்
சுருட்டி எதையுமே
பத்திரப் படுத்திக் கொள்கிற
பகாசூரர்களை
வீட்டுப்
பாதுகாப்புக்கு
விட்டு வைத்தால்
பத்திரமாகவா
இருக்கும்
வீடு ?
இந்த

## வீட்டையே விழுங்கும்
## சுவர்கள்

கண்மாய் நீரைக் கழனிக் குள்ளே
கண்டிப் பாகப்
பாய்ச்சச் சொல்லி
வாய்க்கால் களுக்கு
மதகு மன்னன்
உத்தர விட்டான் !

வருகிற நீரை எல்லாம்
வாய்க்கால் கரைகளே
வாய்க்குள் விழுங்கிக் கொண்டன !

எஞ்சிய கசிவில்
இருக்கிற விழல்களும்
பங்கு கேட்டன !

வருகிற வழியில்
நண்டுக் குழிகளும்
வயிற்றை நிரப்பிக் கொண்டன !

வெறிநாய் வீதியில்
விரட்டப் படுவது இந்த
வேதனைச் சமூகம் !

காவல் நாய்களைக் கூட
காவல் காத்துத்
தொலைக்க வேண்டிய
கட்டா யங்கள் !

விழிகளுக் கஞ்சி
விழிப்பாய் இருக்க வேண்டிய
வெட்கக் கேடு !

பயிர்களைப் பாது காத்திடப்
பதித்த வேலிகள்
கதிர்களை யன்றோ
களவா டுகின்றன !

கட்டுச் சோற்றைக்
கண்கா ணித்திட
கறுப்புப் பூனை யொன்றைக்
கட்டியது எவர்பிழை ?

பழத்தின் உருவில்
பழுதே இல்லை ; ஆனால்
சுளையைக் காணோம்
சொல்வ தெங்கே ?

குடலை மட்டும்
குந்தக மின்றி உருவி
எடுத்து விட்டு
உடலைத் தெருவிலே எறிகிற
உற்சவ மூர்த்திகள் !

கடைசியில் பார்த்தால்
கண்மாய் நீரைக் காணோம் ;
கரைகள் மட்டும்
கறையே படாமல் உள்ளன !

பாட்டுப் பாடி நம்மைப்
படுக்க வைத்து
தூங்க விட்டு அதன்பின்
விழிகளைப் பிடுங்கி
விழுங்கி ஏப்பம் விடுகிற
இமைகளை நம்பி உறங்கவும் முடியுமோ ?

---

## தேகச் சுருக்கக் கோடுகள்...(5)

காலன் விரிக்கிற
கடைசி வலைகளா ?

தொலைந்த வாழ்வை
ஆன்மாக் கோழி
தொடர்ந்து கிளறித்
தேடும் தடங்களோ ?

---

அவலட்சணங்களை, நீ
ஆராதிக்கிறாய்...
ஆனால், உன்
அன்னையை,
அன்புத் தந்தையை
அடுத்தவரிடம்
அறிமுகம் செய்யக்கூட
அருவருப்புக் கொள்கிறாய்!
இந்தப் போலித்தனத்தைப்
புரிய வைப்பதற்காக
உனக்குச் சுட்டிக்காட்டிச்
சொன்னால்
என்னையே நீ
சுட்டுப் பொசுக்குகிறாய்!
பொய்களை வணங்குகிற இது
பொக்குச் சமுதாயம்;
நான்,

## நாட்டிற்குள்ளேயே
## நாடு கடத்தப்படுகிறேன்...

'அம்மா' 'அப்பா' அவர்தம் மக்களால்
'மம்மி' 'டாடி'யாய் மதிப்பில் உயர்ந்தனர்;
சும்மா ஒருநகைச் சுவையாய் நமது
தமிழை 'டமிலா'ய்த் தரத்தில் உயர்த்தினர்;
'இத்தனை வேகமா?' என்றுநான் கேட்டால்
ஏற இறங்க என்னைப் பார்ப்பதா?

நாட்டு மொழிதான் நம்விழிக் கோபுரம்
வேற்று மொழிநம் வீட்டுச் சாளரம்
கண்களை மூடியா கதவினைத் திறப்பது?
உயிரினை மறந்தா உடலினை வளர்ப்பது?
தவறிதைத் தெருவிலே தெளிவு படுத்தினால்
தீர்க்கப் படுகிறேன் தனியனாய் நானே!

என்னதான் கௌரவம் இவர்கருக் கிடைக்குதோ;
திண்ணை தெருக்களில் திரும்பும் இடமெலாம்
தாய்மொழி தவிர்த்துத் தப்பும் தவறுமாய்
மேய்கிறார் வேற்று மொழிகளின் நுனிப்புல்
தட்டிக் கேட்டால் துரோகியாம்; என்னை
நாட்டினுள் நாடு கடத்துகின் றாரே!

சனவரி முதல்நாள் சாமி கும்பிடச்
சமுத்திரம் போலே சாரி சாரியாய்
ஆலய வாயிலில் அலைகளாய்த் தலைகள்;
கேவலம் சித்திரை கேட்பா ரற்றதோ?
அறியாத் தனமிதை அதட்டிக் கேட்டால்
அலட்சியம் செய்கிறார் அந்நியன் போலவே!



தேசிய கீதமே
திருத்தப்படலாமாம்...
நீதி மன்றத்தின்
விசாரணைப் பொருளாகி
அக்கு வேறு ஆணிவேறாக
அலசி ஆராயப்படுகிறது...
நாமும்தான்
கொஞ்சம்

## தேசியங்களைத்
## திரும்பிப் பார்ப்போமே...!

தேசிய மொழிக்கென தெருவிலே யுத்தமா ?
தேவை இல்லை இனிமேல்...
அனைத்துப் பகுதி களிலுமே
ஆமோ திக்கப் படுகிற
'வன்முறை' மொழிதான்
வழக்கில் வந்து விட்டதே !

ஊழல் புகாரா ?
ஊருக் குள்ளே,
இனவெறிப் புகைச்சலா ?

கவலை வேண்டாம்...
தேசிய மட்டத்
தீர்வுக் கொள்கை யாக
விசாரணைக் குழுக்கள்
வந்தே விட்டன!

தண்ணீர் என்பது
தேசியச் சொத்தாம்...
ஆகவே இன்று—
'தண்ணி' அடிப்பது
தேசம் முழுதுமே
நேசிக் கப்படு கிறது...
இந்திய தேசிய
நீரோட் டத்தில்
குதிப்ப தற்குக்
குஜராத் திற்கேன் கோபமாம்?

கட்சி களுக்குள்
வீதியில் வேண்டு மானால்
வேற்றுமை இருக்கலாம்—இந்த
வேற்றுமை யெல்லாம்
வீதி யோடே
நிற்க வேண்டும்—

ஆகவே, நமது
மக்கள் சபைகளில்
மகேசப் பிரதி நிதிகள்
உச்சத் தொனியில்
ஒற்றுமை யாக
உச்சரிப் பதெல்லாம்
என்ன தெரியுமா?

ஒரேயொரு கொள்கை மட்டுமே;

அதன்பெயர், ''கூச்சல் குழப்பம்''

வளர்க இந்த
ஒற்றுமையுணர்வு
வேற்றுமைக் குள்ளே!

பறக்க முடியாப்
பச்சை மயில், இனி
தேசியப் பறவைப் பதவியில்
தொடர்ந்திருக் கவேண்டுமா ?
இதனை இன்றுநாம்
மறுபரி சீலனை
செய்தே ஆக வேண்டும்...

'ராக்கெட்' டுகளுடன்
ராட்சசத் தனமாய்ப்
போட்டி போட்டுப்
பறக்கக் கூடிய
விலைவா சிதான்இனி
விஞ்ஞா னயுகத்
தேசியப் பறவை !
வாழ்க தேசியம்; வாழ்க வளர்கவே !



பதிவிரதையே!
பத்தாம் தேதி பத்தாம் மாதம் (1986)
பத்தாம் தடவையாய்ப்
பயணம் செய்கிறேன் விமானத்தில்...
வீட்டுப் பிரிவு
விசுவருப மெடுக்கிறது
வெள்ளையன் சிறையிலே என்
வீரத் தந்தை—வீட்டின்
வேதனைச் சிறையிலே என் தாய்—
இந்த அந்தநாள் பிரிவு,
சுட்டுப் பொங்கிய பாலில்
சொட்டுநீர் இறங்கியது போல
நினைவுகளில்
நெளிகிறது மின்னலாய்!
முகில்களை முகடுகளுக்கு
முடுக்கி விரட்டுகிற
காற்றுப் பிடரியில்
கட்டி அனுப்புகிறேன்—இப்
பாட்டுக் கடிதத்தை—இதனை
முத்துக்கண்ணீரால் முத்தமிட்டுவாசி—

## கண்ணே உனக்குக்
## கண்ணீரில் எழுதுகிறேன்...

காற்றுத் தேரிலே ஏறும்—உன்
காதில்இப் பாட்டுச் சேரும்!

மேகக் கூட்டம் நடுவிலே
மேனி மிதந்தும் நனைபலே
நெஞ்சோ நினைந்து ஈரம்
நீயோ எங்கோ தூரம்!

தூதுவி டவோவழி யில்லே
தூங்கிப் பார்த்தேன் முடியலே
தவிப்ப திந்த நெஞ்சம்
தண்ணீர் இருந்தும் பஞ்சம்!

வாரிக் கொடுத்ததோ துளிகள்
வாரிசாய்ப் பூத்தன கிளிகள்
நாளும் மகனும் புலிகள்
நாங்கள் நடந்தால் வழிகள்!

கூட்டுக் குள்நம் குஞ்சுகள்
குறும்பு செய்கிற பிஞ்சுகள்
நினது சிறகே இன்சுகம்
நீயே எனது அஞ்சுகம்!

என்னித யமிங்கே துடிக்கும்
உன்செவி யிலங்கே வெடிக்கும்
நாளும் பொழுதும் இணைக்கும்
நமது விழியை நனைக்கும்!

சிறையிலென் தந்தைச் சிங்கம்
சீரழிந் தாள்தாய்த் தங்கம்
அதுவோ அக்கினிக் கடலாம்
இந்தப் பிரிவோ கடுகாம்!

காற்றுத் தேரிலே ஏறும்—உன்
காதில்இப் பாட்டுச் சேரும்!

சிங்கக் கவிஞனே!
"சிங்களத்
தீவினுக்கோர்
பாலம் அமைப்போம்"
என்ற உனது
சிந்தனைத்
தெருக்குச்
செய்து வைக்கிற
சிற்பக்
காணிக்கைதான் இந்த,

## ஈழத் தமிழகம்...

விழிகள் நாளை விடியல் பொழுதின்
விடுதலைச் சூரியக் கதிர்களில்
விழிப்ப தெப்படி
விரல்களே, நீங்கள் உங்களின்
விழிகளைக் குத்திக் கொண்டால்?

நந்த வனங்களைப்
பூக்க வேண்டிய
அசோகனின் அன்பு விதைகள்
அசோக வனத்தில்
அல்லவா இன்று
தூக்கு மாட்டிக் கொண்டன!

முதுகிலே அணில்கள்
மண்ணைச் சுமந்தன அன்று...
முதுகிலே குத்திடும்
மூர்க்க அணிகளே இன்று!

அந்தச் சிங்களத்
தீவு கர்ப்பம் தரித்தது...
இந்த இந்தியத்
தீப கற்ப வாரிசாய்த்
தமிழ்க்குலக் கொழுந்து
தவழப் போவது
சரித்திர உண்மை!

ஈழத் தமிழகம்
ஈனப் போவதால்
இலங்கைக் கின்று
இடுப்பு வலியோ?

தாயைச் சேயை
தவறிலா துபிரித் திடுக...

முடியா விட்டால்—சிப்பி,
நண்டுக் குஞ்சின்; மூங்கில்
வாழைக் கன்றின்
தாய்மார் வரிசை யிலேஇச்
சிங்கள மாதும்
சீரழிந் திடுவாள் !

வெற்றிக் கொடியை
ஏற்றும் போது
வெற்றுப் பதர்களும் வருவர்;

பதுங்கிக் கிடந்தவர்
பார்த்து ரசித்தவர்
பங்கா ளிகளாய் வருவர்;

அஞ்ஞா தவாச
அவதா ரங்களும்
அந்நே ரம்தான் வருவர்...!

ஆமாம்—செத்துச் செத்துக்
கொத்தனார் கட்டிய
கோபுர உச்சியில்
எத்தனார் வந்துதான்
எடுத்து வைப்பார் எழுச்சிக் கலசமே!

மன்றங்களுக்கு வழக்கின்
'மனு'த் தாக்கல் செய்து பெறுவதுதால்தானோ
'மனு'நீதி என்கிறோம்
இன்றைய நீதியை?
தனிமனிதனைத்
தண்டிக்கிற உரிமை
தனக்கிருப்பினும்
தர்மத்திற்கு முன்னால் அந்த
மன்னவனே கூட
மண்டியிடுவதல்லவா
'மனுநீதி'?
மனுநீதியை
மதிப்பதாகச் சொல்வது உண்மையானால்
இந்தச் சமுதாயம்
எத்தனையோ முறை கைதாகி இருக்க வேண்டும்!
சமுதாயமே,
எங்கே உனக்குச்

## சிறைச்சாலை?

வெஞ்சமர் புரிந்த வீரப் புதல்வனை
வஞ்சக வலையிலே வீழ்த்தி
"ஆற்றில்" கொன்றதும்—

வறுமைத் தீயிலே
வாட்டி, மாபெரும் கவிஞனைக்
"கேணியில்" கொன்றதும்—

கொன்றபின் அவர்க்குக்
கண்ட இடமெலாம்
சிலைகள், விழாக்கள் எடுத்துச்
சிறப்புச் செய்வதும்
இச்சமு தாயம்!

குருச்சேத் திரத்தைத்
தொடங்கி வைக்க, இளைஞன்
அரவான் மட்டுமே
கொல்லப் பட்டான்...

ஆனால், இந்திய
விடுதலைப் போரின்
முதலிலும் முடிவிலும்
'ஒரேவய' திளைஞரைப் பலிதர
இச்சமு தாயம்
இச்சை கொண்டதாம்; எனவே,
இருவரின் வயதும்
இறக்கடிக் கப்படும் போது
'முப்பத் தொன்பது'
மட்டுமே யாகும்!

இருவரின் கொலைக்கும்
இடைவெளி என்பதோ
ஆண்டுகள் நூறும்
அதற்கும் மேலும்...

ஆமாம்; முதலில்
விடுதலைப் போரின்
வீர ஏட்டினைப்
பச்சைக் குருதிச்
சிவப்பு மையினைத் தொட்டு
பிள்ளை யார்சுழி
போட்டுத் தொடங்கிய மறவன்
‘ஆற்றில்’— தென்‘கயத்
தாற்றில்’ மறைந்தான்!

‘ஆனந் தசுதந் திரத்தை
அடைந்து விட்டோம்’
என்று முற்றுப் புள்ளியை
வாசித் தகவிஞன்
‘கேணியில்’—ஆம்,‘திரு அல்லிக்
கேணியில்’ மறைந்தான்!

நீங்களும் நானும்
தப்ப முடியுமா?
கயவனைக் கொன்றால் கூட
நமக்குத் தூக்கு; சிறைகள்!
இந்தியத் தாயின்
அடிமை விலங்கை
அறுத்திட எழுந்த
இவ்விரு சிங்கங் களையும்
இறக்கடித் திட்ட
இச்சமு தாயம்
எந்த விலங்கால்
பூட்டப் பட்டது?
அடைப்பது எங்கே, எந்தச் சிறையிலே?

## அவமானச் சின்னம்...

கோதுமை, அரிசி கிடைக்க வில்லை;
காரணம், மக்கள் தொகையாம்!
பருப்பு, எண்ணெய்ப்
பற்றாக் குறைக்கும்
பல்லவி இதுவே!
காரணம் என்னவாம்,
தேர்தல் சின்னம் தீர்ந்தது விட்டதே?

மூச்சுக்கு மூச்சு
'சமுதாயம்'
பேச்சுக்குப் பேச்சு
'சமதர்மம்'!
இந்தக்
காகிதப் பூக்களின்
கயமைத் தனங்கள்தாம்
இந்திய தேசத்தின்
இதயப் புற்றுநோய்க்

## கிருமிகள்...!

'சமுதாயம்' 'சமதர்மம்' எல்லாம்
சந்தர்ப்ப வாதிகளின் சொல்லாம்;

ஆதாயம் பெறுவதொன்றே எண்ணம்
அவமானத் திற்கிவரே சின்னம்;

பதுக்குவோரைப் புலியெனவே பாய்வார்
பாவியிவர் அதிலேதான் மேய்வார்;
பற்றுமிக்க இவரால்தான் நாடு
பவிசோடு வாழுதென்று பாடு!

சாதிகள்மேல் சொடுக்கிடுவார் சாட்டை
சகதியதில் மீன்பிடிக்கும் வேட்டை;

நாவினிக்கப் பேசுவதோ தர்மம்
நாளுமிவர் புரிவதெல்லாம் மர்மம்;

தோழரேஎன் றுயர்த்திடுவார் கையை
தோணாமல் நிறைத்திடுவார் பையை;

திருவாளர் இவரால்தான் நாடு
திருவளர்ந்து செழிக்குதென்று பாடு!

ஆடுமாடு மேயவுண்டு மந்தை
அவைவிலைக்குப் போகவுண்டு சந்தை;
கேடுகெட்டோர் மேயுமிடம் ஒன்றா
கேவலமாய்த் தேடுமிடம் ஒன்றா?

தாய்மொழிக்கென் உயிரென்பார் பேச்சு;
தலையிலொரு குட்டுவைத்தால் போச்சு;

தேசபக்தர் இவரால்தான் நாடு
தீதிலாமல் திகழுதென்று பாடு!



தும்பை மனத்திலே
வெள்ளை முயலும்,
நஞ்சு நெஞ்சிலே
வஞ்சக நரிகளும்
வார்ப்பிலே ஒன்று;
வடிவிலே வேறு!
இனங்கண்டு
கொள்ளடா, ஏ,

## சிங்கத் தமிழனே!

அரசு மரமோ அசைந்தால் உடனே
அடுத்த மரத்திலே
தாவிடும் வெளவால் மனங்களை—

நீண்டவால் விட்டுப் பொந்திலே
நண்டினைப் பிடித்திடும்
நரியார் வஞ்சகக் குணங்களை—

உழைப்பினை உறிஞ்சிச் சுவைத்தே
உறங்கிச் சுகிக்கிற
உலுத்தராம் அட்டை இனங்களை—

சீறிச் சிதையடா சிங்கத் தமிழனே!

வாய்நெல் கொரிப்பது வீட்டெலி; ஆனால்
வயலையே அடித்து
உலையிலே கொட்டும் எலிகளை—

விழித்து விளைத்த கதிர்களில்
விழுந்து மேய்கிற
வீணராம் வெட்டுக் கிளிகளை—

அப்பா விமக்களைக் கொல்கிற
அநியா யவன்முறை
அரக்கப் பேய்களின் விழிகளை—

சீறிச் சிதையடா சிங்கத் தமிழனே !





